# உள்ளே

## செபங்கள் இருக்கும் பக்கங்களின் விபரம்



செபத் தலைப்புக்களின் தொகுப்பை
5 – 7 பக்கங்களில் காண்க

# அறிவிப்பு

"இறைவன் என் தந்தையும் நானும் ஒன்றே"

"என்னைக் காண்பவன் இறைவனையே காண்கிறான்" என்றார் சேசு.




அவர் காலத்தவர் சிலர் இதைக் கேட்டு, "இவன் தேவ தூஷணம் சொல்கிறான்" என்று சொல்லிச் சிலுவையில் அறைந்து அவரைக் கொன்றனர்.

"நான் இறைவனால் நிறுவப்பட்ட மறை: இறைவனே என்மூலம் உலகை மீட்கிறார்: என் சொற் கேட்டு நடப்பவனே மீட்படைவான்" என்கிறது கத்தோலிக்கம்.

ஏன் இந்த ஆணவம் என்று உலகம் அதைப் பழிக்கிறது. அழிக்கவும் முயல்கிறது.

ஆனால் உலகில், தானே இறைவன் என அறைந்து கூறிய மனிதன் சேசுவைத் தவிர

வேறு யாருமில்லை. தானே இறைமறை என ஓங்கி உரைப்பது கத்தோலிக்கம், தவிர வேறு எந்த மறையும் இல்லை.

கிறிஸ்துவும் கத்தோலிக்கமும் தெளிவு கெட்டவர் என்று மதியுளார் சொல்வரா?

கிறிஸ்து நல்லவர்; உண்மையை உணர்ந்து உணர்த்தியவர் என்பதை யாவரும் ஒப்புக் கொள்வர் அல்லவா?

இது இப்படியானால் அவர் சொல்லும் உண்மைகளையும் ஏற்படுத்திய சபையையும் நம்பி ஏற்றுக்கொள்ளவேண்டாமா?

கிறிஸ்துவும் கத்தோலிக்கமும் தமதாக்கும் இறை உரிமை உண்மையா என நான் சற்றேனும் சிந்திக்க வேண்டாமா?

சீர் ஒளிசேர் அறிவே, நீரே எனக்கு ஒளி தந்து, உண்மையை உணர்த்த வேண்டும். அவ்வுண்மை என்னை வழியில் நடத்த வேண்டும்.

இதற்குத் துணையாகவே
இச்சிறு நூல்.

நீரே ஒளி.

I. அறிவுக்கு ஒளி

1. இறைவன் உண்டு.
2. மறை தேவை.
3. எந்த மறை?
4. தடுத்தாட் கொள்வீர்.
5. இறைமகன் நம்குரு.
6. கிறீஸ்துவே இறைமகன்.
7. மெய்மறை ஒன்றே.
8. மனச்சான்றை மழுக்கவேண்டாம்.
9. வீரம்: விடாப்பணிவு.
10. பிறவிக்கடல் கடந்தேன்.
    i. மனித உயிர் அழியாது.
    ii. முக்தி — நரகு.
    iii. முக்தியும் நரகும் முடிவில்லாதவை. எனவே, பிறவிக்கடல் இல்லை.
11. இன்றே நன்றுசெய்.
12. வாழ்க்கை இதற்கே.

## II. அகத்துக்கு ஒளி.

### A. போற்றித் துணைதேடு.

1. இறைவன் காப்பார்.
2. உமைப் போற்றினேன்.
3. நீர் ஆட்கொண்ட மாண்பு.
4. உம் நலமும் பெருமையும்.
5. செபவரம் வேண்டும்.
6. பெரியவர்க்காக வேண்டுதல்.
7. கீழ் உள்ளவருக்காக வேண்டுதல்.
8. வேலைக்கு முன் — பின்.
9. படிப்பிற்குதவி.
10. ஓய்விற்கு முன் — பின்.
11. பயணத்துக்கு முன் — பின்.
12. நோய் நொடியில்.
13. சாவுக்கு ஆயத்தம்.

### B. பாவம் போக்கு.

1. எது பாவம்?
2. விதி இது.
3. மன்னிப்புக் கோருதல்

4. பாவத்துறவு.

i. பாவத்துக்கு அச்சம்.

ii. பேய் வலைக்கு அச்சம்.

iii. நரகம் வேண்டாம்.

iv. அன்பும் பயமும் அறவாழ்வுக்குத் தூண்டுகோல்.

v. செய்ததற்கு வருந்துகிறேன்.

5. அர்ப்பணம்.

C. பக்குவ வாழ்க்கை.

1. "என்வழி நட"

2. யாவும் உம் அன்புப் பணிக்கே

3. அன்னையின் துணை.

4. பாலன் வழி.

5. நிந்தை வேட்கை.

6. கருமமே கண்.

7. உம் தோழமை.

8. யாவும் உம் பெருமைக்கே.

9. லயிப்பு.

10. பண்டிகை.

# நீரே ஒளி

ஒளிப் பிழம்பான இறைவா! எம் உளத்தை உம் ஒளியால் நடத்தவேண்டும். நீர் எம் மனு உரு எடுத்து, கடும்பவம் தீர்த்து, மீட்டு, உம் சபை மூலம் வழி காட்டும் மாண்பை உம் உள் ஒளியால் உணரச் செய்யவேண்டும்.

இதற்கே நோன்பிருந்து குடும்பம் அனைத்தும் கூடி, உண்டு, வாண மத்தாப்பு, சிட்டி, குத்துவிளக்குகளில் உம் ஒளியைக் கண்டு மகிழ்ந்து உமைக் கும்பிட்டோம்.

எம் வாழ்க்கையின் ஒளி நீரே!

சரணம்.

# I. அறிவுக்கு ஒளி

## 1. இறைவன் உண்டு

இவ்வுலகப் பொருட்களைக் கண்டேன். அவை தோன்றி மறைவதைக் கண்டேன்; சங்கிலித் தொடர்போல ஒன்றுக்கொன்று ஆதாரமாய் நிற்பதைக் கண்டேன். இத் தகைய சங்கிலித்தொடர் தானாக அந்தரத் தில் தொங்கிக்கொண்டிருக்க முடியாது. அதைப் பிடித்துத் தாங்கிக்கொண்டிருக் கும் பரம் பொருள் ஒன்றிருக்கவேண்டு மென உணர்ந்தேன்.

மண், மரம், விலங்கு, மனிதர்களாகிய இவ்வுலகப் பொருட்கள் அனைத்தும் எத்துணை வியப்பிற்குரிய முறையில் அமைந்திருக்கின்றன! அவற்றின் ஒவ் வொரு பாகமும் பிற பாகங்களுக்கு, ஒவ் வொரு பொருளும் பிற பொருள்களுக்கு, (பூ தேனீக்கு, தேனீ பூவுக்கு) உதவும் முறையில் அமைந்திருப்பதைக் காணும் போது இத்தகைய இணைப்பு தானாகவோ அல்லது எந்தக் குருட்டு சக்தியாலோ வந்திருக்க முடியுமா?

இவற்றை அமைத்த, தாளுகவே நன்மை அனைத்தும் பெற்று நிறைந்து தனக்கு வேறு ஆதாரம் அவசியமில்லாது கடந்து நிற்கும் நீர் இருந்தால்தான் இவ்வுலகம் நிற்க முடியும். எனவே நீர் இருக்கத் தான் வேண்டுமெனத் தீர்மானிக்கிறேன். என் தெய்வ நம்பிக்கையை திடப்படுத்தி யருளும்.—சரணம்.

## 2. மதம் தேவை

எனைப் படைத்தாண்டு நடத்தும் இறைவனே! எமை நீர் படைத்ததால் யாம் உமது உடைமை அன்றோ! உம் சொற்படி ஆட வேண்டியவர் அன்றோ! உமை வாழ்த்தி, வணங்கி, உம் மக்களைக்கொண்ட இவ்வுலகை வளர்த்து உம் சன்மானம் பெறவேண்டியவர் அன்றோ!

நான் தனியாகத் தோன்றி வளர்வதில்லை. சமுதாயத்தில் தோன்றி சமுதாயத்தி லேயே வளர்கின்றேன். நான் சமூகப் பிராணி.

நீர் என்னைப் படைத்ததால் நான் உம்மை வழிபடவேண்டும். நீர் எம்

சமுதாயத்தைப் படைத்ததால் எம் சமுதாயம் முழுவதும் உம்மை வழிபட வேண்டும்.

பலர் கூடி உம்மை வழிபட வேண்டுமானால், ஒரு ஒழுங்கு முறை இருக்க வேண்டுமல்லவா? இல்லாவிட்டால் ஒரே குழப்பமாய்ப் போகாதா? பொது வழிபாடு செய்யவேண்டுமானால் அதைச் செய்யும் முறையைக் காட்டும் பொது நிறுவனமும் தேவையல்லவா? இதைத்தானே சமயம் என்கின்றோம்.

சமூகப் பிராணியாகிய நான் உம்மை மனித குலம் முழுவதோடும் கலந்து வணங்கும் வழியைக் காட்டும் மதம் எது என எனக்கு உணர்த்தீரா?

## 3. எந்த மதம்?

யாவரும் சேர்ந்து இறைவனை வழிபடும் முறையைச் சொல்லும் சமூக நிறுவனமே மதம். ஆனால் பல மதங்கள் பல வழிகளைக் கூறுகின்றன. இவை ஒவ்வொன்றும் உமக்குப் பிரியமென, அதன்படி உமை வணங்கினால் நீர் மகிழ்ந்து எமைக்

கருணையுடன் நோக்குவீர் என யார் கண்டது? எங்களுக்கு என்ன நிச்சயம்? இவை உமக்குப் பிரியமற்றவைகளானால் அவற்றைக் கடைப்பிடித்துப் பயன் என்ன?

நீர் இந்த மதத்தின் சொற்களே எனக்கு பிடித்தவை என்று சொல்லி, அதற்கு அடையாளங்கள் கொடுத்தால், அல்லது ஏதாவது ஒரு மதத்தை ஏற்படுத்தி நீர் தான் அதை ஏற்படுத்தியது என நாங்கள் கண்டுபிடிக்கக்கூடிய அடையாளங்கள் கொடுத்தால் அதை நாங்கள் பின்பற்ற லாம்.

தான் இத்தகைய மதம் எனக் கத்தோலிக்கம் மட்டுமே சொல்கிறது. அதன் உண்மையை உணர எமக்கு வேண்டிய ஒளி தாரீரோ!

4. தடுத்தாட்கொள்வீர்

உலகக் குழப்பங்களை நோக்கும்போது, எந்தத் தெளிவிற்கும் நான் வர முடியாது. மணிவாசகரே திணறி இருக்கிறார்.

நீர் எம் மனத்தில் தோன்றவேண்டும். நீர் எம் குருவாக வேண்டும். நீர் எம் மீட்பனாக வேண்டும். நீர் வானோர் அறியா வழி எமக்குத் தந்தருளவேண்டும். நீரே எம் கல் உளங்களைப் பிசைந்து கனியாக்கி, அன்பு இன்ப வெள்ளத்தாழ்த்தி வினை கெடுக்கும் வேதியனாகவேண்டும். இதுவே எம்நாட்டவர் ஏக்கம். எம் ஏக்கத்தை நிறைவேற்றி வைக்க, எமைத் தடுத்தாட் கொள்ள வாரீர்!—வணக்கம்.

5. இறைமகன் நம் குரு

மண்ணும் விண்ணும் மனிதர் காண்பது நுண் அறிவிற்கு இதன் நூதன அமைப்பும் அதைப் பண்ணிவைக்கும் பரமனும் தெரியும். ஆயிரம் பெயர்கள் அப்பரமனுக்கே.

மனுக்குலம் ஒன்று. அதன் மறையும் ஒன்றே. மனிதர் சிதறவே மறைப் பண்பும் சிதறி நாட்டிற்கொன்றாய் மாறிப் போயிற்று. செம்பொருளே சிவன் என்றும், அவன் திருமகனே முருகன் என்றும் வணங்கப்படுவதும், இன்னும் பரமனே திருமால் என்றும் அவன் மனு உரு எடுத்தபோது கண்ணன் என்றும் போற்றப்படுவதும் தெரிந்ததே.

சிவமாகிய செம்பொருள் இப்புவியில் குருவாகி வந்து வினை கெடுத்த மாண்பை மணிவாசகர் பாடி உருகுவார். மாலவன் ஆயர்பாடிக் கண்ணனாகி தரும உபதேசம் புரிந்த மாண்பை நினைந்து மகிழ்ச்சியில் மூழ்குவர், ஆழ்வார்கள். முருகவேளாய் வந்து அசுரரை ஒழித்த இறை மாண்பை யும் பக்தர் ஏற்றுவர்.

முருகன், கண்ணன் சரித்திரத்தில் எந் நாள் வந்தாரோ எவரும் அறியார். ஆனால் சேசு பிறந்ததும் சரித்திர நிகழ்ச்சி. தாமே இறை மகன் என்றும், மீட்பர் என்றும், தாமே உலகின் ஒளி, வழி, உய் வென்றும் நன்மனதுள்ளோர் நம்பக்கூடிய முறையில் காட்டியுள்ளார். அவர் அமைத்த, அனைத்துலகும் பின்பற்றவேண் டிய சமயமே இன்று கத்தோலிக்கமாகத் திகழ்கிறது.

நாம் பாடும் முருகனும் கண்ணனும் உண்மையில் சேசுவே அன்றோ! இறை வனையே நினைத்து நினைத்து உருகும் நாம் அவரது திருமகன் சரித்திர சான்றாக நம் மனுக்குலத்துக்குள் வந்து நம்மை மீட்டு உலகக் குருவான மாண்பை, அவ்ரே நம்

உளக்குருவாகவும் தோன்றி நமக்கு மெய்ப்பிக்கவேண்டுமென ஏங்குவோம்.

இறைவா! இந்தியப் பழங்கதைகளுக்குள் புதைந்து கிடக்கும் மெய்ப்பொருள் கிறிஸ்து. கிறிஸ்து பிறந்து இறந்தது சரித்திர உண்மை. அவர் உலகறிய ஏற்படுத்திய வழியே கத்தோலிக்கம். சரித்திர உண்மைகளையும் படிப்பினைகளையும் புனைகதைகட்குள் மறைத்துப் புகட்டும் எம்நாட்டுப் பழக்கம் கேடாகவும் போகலாமா? கருத்தை மறந்து கதை என்னும் வலையிலேயே சிக்குண்டு போகவும் நேரிடுமா?

எம்நாட்டவர், உணர்ந்தும் அல்லது உணராமலும்கூட, நாடும், தேடும், வணங்கும், மீட்பர் சேசுவே. யாம் உமை வழிபட வேண்டிய வழி அவர் திருச்சபையின் வழியே. அதை யாம் உணர்ந்து பலன் பெறுவது எப்போது?

முழுமுதல் தேவனே! நீர் வகுத்துள்ள வழியை யாம் தெற்றெனக் கண்டுணர்ந்து ஏற்று எம் மயக்க உணர்வினின்று தெளிவடையும்படி அருளமாட்டீரா!

ஒளி இறைவனே! உம் ஒளி எம் உளத்தில் மிளிர்வதாக—சரணம்.

6. கிறிஸ்துவே இறைமகன்

கிறிஸ்துவே! நீர் நல்லவர் என்று அனைவரும் ஒப்புக்கொள்வர். இதில் ஐயம் இல்லை. நீர் உண்மையை உணர்ந்து உணர்த்துபவர், எம் நம்பிக்கைக்குரியவர் என்பதையும் யாம் ஒப்புக்கொள்கிறோம். நீர் சொல்லியிருக்கும் யாவற்றையும் யாம் கண்டுணர்ந்து உம்மை நம்பும் வரம் தாரும்.

நானே இறைவன் என்கிறீர். நானே ஒளி, வழி, உய்வு என்கிறீர். என்னைப் பிதா அனுப்பியதுபோல, அதே அதிகாரத்தோடு நானும் உங்களை அனுப்புகிறேன். உங்கள் சொல்லைக் கேட்டவன், என் சொல்லைக் கேட்டவனாவான். உங்களை ஏற்றுக்கொள்பவன் மீட்படைவான் என உம் சபைக்குச் சொன்னீர்.

உம் சொற்களைச் சரியாய்க் கண்டுபிடித்து, அதில் எங்களுக்கு விருப்பமானதை மட்டுமல்ல நீர் சொல்லியுள்ள எல்லா உண்மைகளையும் ஏற்று அதன்படி வாழும் வரம்தாரும்—சரணம்.

## 7. மெய்மறை ஒன்றே

எல்லா மதமும் ஒன்றுதானும்! பின் ஏன் அப்படிச் சொல்பவர்கள் தம் மதத்தைவிட்டு உடனே வேறொரு மதத்தில் சேர்வதில்லை. தம் மதமே பெரிதென்று நினைப்பதால்தானே!

ஒரு காரியத்தைப்பற்றி எதிரிடையான கொள்கைகளைக் கொண்ட எல்லா மதங்களும் உண்மையை உரைப்பதாக எப்படிச் சொல்ல முடியும்? இரண்டும் இரண்டும் நான்கு என்பதும் சரிதான், ஐந்து என்பதும் சரிதான் என்று துணிந்து சொல்பவரைப்பற்றி என்ன சொல்வது! எந்த அற்பக் காரியத்திலும் இப்படிப்பட்ட பேச்சை யாரும் மதிக்கமாட்டார்களே! யாவற்றிற்கும் அடிப்படையான இறை வழிபாட்டில் மட்டும் இதை எப்படி ஏற்றுக்கொள்ளக்கூடும்?

எல்லா மதத்திலும் உண்மை இருக்கத்தானே செய்கிறது என்கின்றனர். ஒரு அவுன்ஸ் மையை எடுத்து ஒரு மைக்கூட்டில் ஊற்றி வைக்கிறேன். இன்னும் ஒரு அவுன்ஸ் மையை எடுத்து நிறையத்

தண்ணீருள்ள ஒரு பானைக்குள் ஊற்றி வைக்கிறேன். இரண்டு பாத்திரங்களிலும் ஒவ்வொரு அவுன்ஸ் மை இருக்கத்தான் செய்கின்றது. ஆனால் இரண்டும் உபயோகத்துக்கு ஆகுமா? தண்ணீருக்குள் ஊற்றப்பட்ட மையை உபயோகிக்க முடியுமா? ஆழ்ந்த உண்மையையும் புனை கதைகளோடும், அபிப்பிராயங்களோடும் கலந்தபின் எது மெய் எது பொய் என எப்படி விளங்கும்? மதங்களிலும் இப்படியே: பொய்யோடு கலந்திருக்கும் மெய்யினால் பயன் இல்லை. கலப்பற்ற மதமே தேவை. அது உளதா? எது? என ஆய்தல் தேவை. சும்மா எல்லாம் ஒன்று தான் என்பது எம் புத்தியின் பெருமைக்கு ஒவ்வாதது.

நாட்டுக்கொரு மதம் போதும்: இந்திய நாட்டுக்கு இந்துமதம் போதும் என்கின்றனர். மனிதகுலம் ஒன்று: அக்குலம் முழுவதையும் ஒரே பொருளாக இறைவன் படைத்துள்ளார். அக்குலம் முழுவதும் சேர்ந்து இறைவனை வழிபட வேண்டும்: எனவே அனைத்துலகுக்கும் அப்படி வழிபடும் முறையைக் காட்டும் பொதுவான ஒரு மதம் தேவை.

மதம் மனித தத்துவத்தை அடுத்தது: மனித தத்துவமோ இடம், காலம் முதலிய சூழ்நிலைகட்கு மேற்பட்டது. எனவே மதமும் அப்படியே இடம், காலச் சூழ்நிலை கட்கு மேற்பட்டது.

இடம், காலம், நாகரீகம், கலை, பக்குவம் முதலியவற்றிற்கு ஏற்ருற்போல், இந்தியப் பண்பாட்டு அனுபவங்களுக்கு ஏற்ருற் போல், அனுசாரணைகள் மட்டும் வேறுபடக் கூடுமேயொழிய அடிப்படை மனித, மத தத்துவங்கள் அனைவருக்கும் ஒன்ருய்த் தான் இருக்க முடியும்.

அந்த ஒரே மதமும் உமக்குப் பிரிய மானதென நிச்சயமாளுல்தான் அதைப் பின்பற்றிப் பலன் உண்டு. இன்றேல் வீண் முயற்சி.

உமக்குப் பிரியமான மதம் ஒன்று உளதா? அது எது? கத்தோலிக்கம் மட்டும்தான் அத்தகைய உரிமை பாராட்டு கின்றது. அது உண்மையாளுல், உண்மை யென என் புத்திக்கும், உளச் சான்றுக் கும் படுமாளுல் அதைப் பின்பற்ற வேண் டும். இன்றேல் மீட்பில்லை. கெடுபிடியான

கட்டம் இது. ஒளிதாரும்! வழிகாட்டும்! அம்மை அப்பனே!

8. மனச்சான்றை மழுக்க வேண்டாம்

நள்ளிரவிருட்டிலும் நன்றே செய் என்கிறது உள்ளம். செய்தது நன்மையா தின்மையா எனச் சான்றும் பகர்கிறது உள்ளம். நன்மை செய்யின் மகிழ்வூட்டித் தின்மை செய்யின் உறுத்திக்கொண்டே இருக்கிறது அவ்வுள்ளம்.

இவ்வுள்ளத்தை அமைத்தது நீர் அன்றோ: அதன்மூலம் பேசுவதும் நீர் அன்றோ! உம் சொல் செவியில் படாதபடி உலகச் சந்தடிக்குள் நான் புகுந்தால், செவியில் பட்டாலும் பரவாயில்லை என்று மீறி நடந்தால், அது உம் ஒளி அல்ல என மழுக்கிக்கொண்டுபோனால் உமக்கன்றோ வருத்தம் வருவிக்கின்றேன்! இதே பாவம்: இதன் தண்டனையே நரகம். என் மனச்சான்றை மழுக்கா வரம் தாரும்.

9. வீரம், விடாப் பணிவு

உணர்ந்து உணர்த்துவதே உளச் சான்று. மனிதன் வளர வளர, அவன்

அறிவும் அனுபவமும் வளர்வது தேவை: அதோடு நல்லது கெட்டது எது, இறைவனுக்குப் பிரியமான வழிபாட்டுமுறை எது என அவன் தினமும் ஒருபடி அதிகமாக ஆய்ந்து தெளிவு பெறுவதும் தேவை. இவ் ஆய்வு, தெளிவு இன்றேல் ஞான வளர்ச்சி இல்லை. இப்படி அதிகத் தெளிவு பெறும்போது அந்தத் தெளிவின்படி மேலே ஏறவேண்டியதும் கடமை. நான் பின்பற்றவேண்டிய அத்தகைய மேல்வழி, புது வழி தென்பட்டால் அதற்கு மன, மத மாற்றம்கூட தேவையென என் உளச்சான்றுக்குப் புலனானால் அந்த உம் அறவுரைக்கு உட்பட்டு முக்தி வழி நடக்கும் வரம் தாரும். மணிவாசகர்போல் மந்திரிப் பதவி துறந்தும் உம் வழியில் ஈடுபடும் அருள்தாரும். உளச்சான்று மூலம் உம் ஒளி தென்படும்போது எந்தப் பரித்தியாகம் செய்யவேண்டிவரினும், அரிச்சந்திரன் போல் உண்மைக்காகவும், பாண்டவர் போல் தருமத்துக்காகவும், ராமனைப் போல் கடமைக்காகவும் எத்தனை பாடுகளைப்பட வேண்டிவந்தாலும், வீரத்துடன் உளச்சான்றின் உள் ஒளியை,

உண்மை வழியைப் பின்சென்று முக்தி பெறும் வரம்தாரும்—சரணம்.

10. பிறவிக்கடல் கடந்தேன்

ஒன்றே கடவுள். ஒன்றே மனிதகுலம். ஒன்றே பிறப்பு. ஒன்றே இறப்பு. ஒன்றே தீர்ப்பு. ஒன்றே முக்தி. ஒன்றே நரகு. எனவே இவ்வாழ்நாளை வீண் நாள் ஆக்காமல் உளத்தின் மூலம் நீர் உணர்த்தும் அறவுரையைக் கெடுபிடியான கட்டளையாகத் தெளிந்து, நல்வாழ்வு வாழும் வரம்தாரும்: அதனால் அழியா நலம்பெறும் அருள் தாரும் — சரணம்.

i. மனித உயிர் அழியாது

உடலும் உயிரும் கலந்ததே மனித ஆள் அன்றே! குறிப்பிட்ட இடம், கால அனுபவச் சூழ்நிலைகட்குள் தோன்றி வளர்ந்து மறைபவனே குறிப்பிட்ட ஒரு மனித ஆளன்றே! இத்தகைய ஒருவருடைய உயிர் உடலைவிட்டுப் பிரிந்தாலும் அழிய முடியாது: இதே தொன்றுதொட்டு மனிதர் உணர்ந்த உண்மை.

மனிதனுக்கு மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்புலன் அறிவு, தொழிலும்,

இன்னும் புலனைக் கடந்த பகுத்தறிவு, தொழிலும் இருப்பதைக் காண்கின்றோம். விலங்குகட்கோ ஐம்புலனறிவு, தொழில் மட்டுமே இருப்பதைக் காண்கிறோம். வேறு எத்தொழிலும் இருப்பதாக இது வரை எவரும் கண்டதில்லை. எனவே இவ் வறிவு, தொழிலுக்குத் தகுந்த ஆதார மான தத்துவமும் மனிதனுக்கும் விலங்கு கட்கும் முறையே இருக்கவேண்டு மல்லவா!

விலங்குகளின் உயிர்த்தத்துவம் புல னறிவு, தொழிலுக்குத் தகுந்த ஆதார மான தத்துவம். மனித உயிர்த்தத்துவம் புலன் அறிவு, பகுத்தறிவு இரண்டிற்கும் ஆதாரமான தத்துவம். இதுவே எம் அனு பவ உணர்விலிருந்து யாம் தீர்மானிக்கக் கூடிய உண்மை.

புலனறிவுத் தத்துவம் புலனோடு சேர்ந்து, அழிவதில் வியப்பில்லை. (உடல்) புலனறிவுக்குக் கடந்த பகுத்தறிவுத் தத்துவமோ, புலன் (உடல்) அழியினும் தான் அழியாது: பகுத்தறிவுத் தத்துவ மாகிய மனித உயிர், உடல் அழிந்தாலும், தான் அழியாது. உருவமற்ற தத்துவமாத

லால் அதைப் பங்கு பாகமாகப் பிய்த்து அழிக்கவும் முடியாது.

மனிதன் மாண்டாலும் அவன் உயிர் மாளாது. என்றும் நிற்கும்.

ii. முக்தி — நரகு

நல்லதைச் செய். கெட்டதை விலக்கு என்கிறது எம் உளம். அவ்வுளத்தை அமைத்தது நீர்: அப்படி அறவுரை செய்யச் செய்வது நீர்: எனவே அதன் சொல் உம் சொல்லன்றோ!

அச்சொற்படி நடந்தால் வெகுமதி கிடைக்க வேண்டுமல்லவா? அதை மீறினால் தண்டனை பெறவேண்டுமல்லவா? இல்லாவிட்டால் அச்சொல் பொருளற்றதாய்விடுமே! அது இருந்து என்ன, இல்லாமல் என்ன; அதன்படி நடந்து என்ன, நடக்காமல் என்ன என்று ஆகிவிடுமே! பணிவிற்குத் தகுந்த பரிசு இருக்கத்தான் வேண்டும். ஆனால் அப்பரிசு இவ்வுலக வாழ்க்கையில் பூர்த்தியாய்க் கிடைப்பதில்லையே! நல்லவர் துன்பமும் தீயவர் இன்பமும் சான்று பகரவில்லையா?

என்வே இங்கு கிடைக்காத பூரண வெகுமதி, தண்டனை இவ்வுலக வாழ்க்கைக் குப்பின் நமக்கு கிடைக்கத்தான் வேண் டும்; மோட்ச, நரகம் உண்டென்பதே முடிவு.

மரித்த பின்னும் நிலைத்து நிற்கும் நம் உயிர் மோட்ச நரகிற்கு உட்பட்டு நிற்கும் என்பதே நம் முடிவு.

iii. முக்தி நரகுக்கு முடிவு இல்லை

அற்ப மனிதன் செயலுக்கு அழியா வெகுமதி இருக்க முடியுமா? அற்ப மனித னின் தவறுக்கு அழியாத் தண்டனை தகுமா?

சொற்பக்கால வெகுமதி, தண்டனைக்குப் பிறகு என்ன செய்யும் மனித உயிர்? இது ஒரு நல்ல கேள்வியே.

மீண்டும் பிறக்க முடியாது. ஒரு குறிப் பிட்ட இடம், காலச் சூழ்நிலைகட்குட்பட்ட ஒரு உடல் உயிர் இரண்டும் சேர்ந்துதான் மனித ஆள். ஒரு உடல் இடம், காலத் துடன் பொருந்திய உயிர், அதற்குப் பொருத்தமானதாக அமைக்கப்பட்ட

உயிர் இன்னும் ஒரு உடல் இடம் காலத்துக்குள் புகுந்தால் அதன் அடையாளம் அழிந்து வேறு பொருளாக மாறிவிடுமன்றே! முதல் ஆளுக்கும் இரண்டாவது ஆளுக்கும் தொடர்பின்றி மாறிவிடும் அல்லவா? அவனே இவன் என்று சொல்ல முடியாதல்லவா! உயிரின் அளவே தன் உடல் இடம் காலத்தின் அளவுதான். அவற்றின் தொடர்பு, நினைவின்றி அதற்கு என்று தனி அளவு, நிலைமை இல்லை.

மாறி வேறு உடல் இடம் காலத்தில் ஒரு உயிர் புகுந்து வாழ முடியாது. மனிதன் மாறிப் பிறக்க முடியாது.

**கறந்தபால் மடுப்புகா கடைந்த வெண்ணெய் மோர்புகா**
**உடைந்துபோன சங்கின் ஓசை உயிர்களும் உடற்புகா**
**விரிந்த பூ உதிர்ந்த காயும் மீண்டு போய் மரம்புகா**
**இறந்தவர் பிறப்பதில்லை இல்லை, இல்லை இல்லையே.**

— (சிவவாக்கியர் 46)

மாறிப் பிறக்கமுடியா நிலைமையில் உயிர் எப்படி நிற்கும்? வெகுமதி, தண்டனை முடிந்துபோனால் அதன் பின் அதன் நிலைமை என்ன? இது நம் புத்திக்கு எட்டாதது.

இறைவனே நம் உட்புகுந்து கலந்து நம் செயல்களைத் தமதாக்கிக்கொண்டால் நம் செயல்களுக்கு அவர் திறமையும் கிடைக்கும். அதன் பயனாக அளவற்ற அவர் அருளால் நமக்கு அளவற்ற வெகுமதி, அழியா இன்பம் கிடைக்கக்கூடும்.

அப்படிப்பட்ட வழிக்கு நம்மை இழுக்கும் இறைவன் கரத்தை உதறித் தள்ளினால் அழியாத் தண்டனையும் கிடைக்கும். நம் உயிரும் அழியாத அத்தண்டனை, சன்மானத்தில் ஈடுபட்டு மூழ்கி நிற்கும்.

இத்தகைய நிலைமை நமக்குளதென்பதை இறைவன் அறிவித்தால்தான் தெரியும். அவர் அவ்வாறு அறிவித்திருக்கிறார் என்பது கிறிஸ்தவ உண்மை. இதே இறை அருள் திறனை உணர்ந்து வியந்தே பக்தர் அனைவரும் பாடுவர். எனவே முக்தியும் நரகும் முடிவற்றவை என்பதே நம் தெளிவு. எனவே,

### பிறவிக்கடல் இல்லை

உயிரை மட்டும் ஆளாய்க் கருதி அதே உயிர் கூடுவிட்டுக் கூடுபாய்ந்து பிறப் (=பிறப்பு இறப்பு) பிறப்பெடுக்கும் என

நினைப்போர் உயிர், உடல் இரண்டும் சேர்ந்தே மனித ஆள் என்பதை மறந்து சொல்வர்.

"என் உடல்" என்பதால் நான் என்பது உயிர், எனது உடைமையே உடல். உடல் என்பது ஆள் தத்துவத்தை சேர்ந்த தல்ல என்பர். ஆனால் அதேபோல் "என் உயிர் போய்விடும்போல் இருக்கிறதே" எனும்போது "என்" "நான்" என்பது யார்?? உடலும் உயிரும் சேர்ந்தே நாம் ஒரு ஆள் ஆகின்றோம். என் உடல், என் உயிர் என்பது நம் பேச்சு முறை என்பது தெளிவு.

ஒரே குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள உயிர்களே மாறிமாறிப் பிறவி எடுத்தால், உயிர்ப் பிராணிகளின் தொகை அதிக மாகிக்கொண்டே போகக்கூடாதல்லவா? நாம் அறிவதென்ன? ஒவ்வொரு இனத்திலும் உயிர்ப்பிராணிகள் பலுகிக் கொண்டே போகின்றன. அதாவது புதிய உடல், இடம், காலத்துக்கு ஏற்ற புதிய உயிர்கள் உண்டாகி வாழ்ந்து மறைகின்றன என்பதே தெளிவு.

பல பிறவிகள் இருந்தால் இவ்வாழ்க்கையை எப்படி வாழ்ந்தாலும் பரவாயில்லை. அடுத்த வாழ்க்கையில் பார்த்துக் கொள்ளலாம் என்ருகிவிடும். இப்போதே ஒழுக்கத்தைக் கடைப்பிடி என்று யாரும் கெடுபிடியாகச் சொல்ல முடியாது. ஆக, உலக வாழ்க்கை எத்தனை கோடி ஆண்டுகளாக நடந்தாலும் இவ்வுலகில் சன்மார்க்க ஒழுக்கத்தை, உள அறவுரைக்கு உட்பட்டு நடக்கவேண்டிய கடமையை வற்புறுத்த முடியாது. வாழ்க்கை, உள உணர்வு யாவும் பொருளற்றவையாகிவிடும்.

நிலைத்து நிற்கும் உயிர் எப்படித் தனியாய் நிற்கும் எனக் கண்டுபிடிக்க முடியாமல் ஏதாவது ஒரு பிறவி எடுக்கலாம் என அபிப்பிராயப்பட்ட காலம் இருந்தது. ஆனுல்

இப்போது இக்கொள்கையை எல்லா நாட்டவருமே கைவிட்டுவிட்டனர். நாமும் கூட நம் நாட்டில் மாண்ட பெரியவர்கள் மறுபடியும் பிறந்ததாகவோ, பிறக்கப் போவதாகவோ நினைப்பதற்கு நமது புத்தி இடம் கொடுப்பதில்லையே. அவர்கள்

அப்படியே இருப்பதாக நினைத்து வணங்கிக்கொண்டே இருக்கிறோமே!

இளமையிலேயே முதிர்ந்த பக்குவம் பெற்றுத் தோன்றுபவர்களைப் பார்க்கும் போது, இது "பூர்வ வாசனையால்", "முன் பிறவிப் புண்ணிய பலனாக", "தொட்ட குறை விட்டகுறையாக" மூதாதையரே திரும்பி வந்தது எனத் திருப்திப்படுவர் சிலர். ஆனால் சில சமயங்களில் கைகால்களோ, பிற உறுப்புகளோ சூம்பியோ, அல்லது அளவுக்கு மிஞ்சியோ பிறப்பதில்லையா? அதுபோல ஏதாவது ஒரு பக்குவமும் மிகுந்து தோன்றலாமல்லவா! வம்சவிருத்தி ஒழுங்குப்படி மூதாதையரது உடலணுக்களோடு குறை, குணாதிசயங்களும் கூடப் பின் தோன்றல்களுக்கும் இறங்கிவரலாம். தாய் தகப்பன், பாட்டன், பாட்டி உயிரோடிருக்கும் போதே அவர்களுடைய அச்சு அடையாளத்தோடும் குணாதிசயங்களோடும் கூடிய பிள்ளைகளும் இருக்கின்றனர். இதைப் பார்க்கும்போது "அவர்கள் தாத்தாவேதான்" (அதே ஆள்தான்) வந்து பிறந்திருக்கிறார் என்று சொன்னால் நாம்

ஒப்புக்கொள்ளக்கூடுமா? அதற்கு ஆதாரமுமில்லை. அறிவுக்கும் முரணானது.

பத்திரிகைகளில் பூர்வ வாழ்க்கை அனுபவ நினைவுடன் பிறந்துள்ள பிள்ளைகளைப் பற்றிச் சொல்கிறார்கள். ஆனால் இத்தனை கோடி மக்களில் இவர்கள் எத்தனை பேர்? உண்மையான விநோதப் பிறவிகள் அல்லவா! இவர்கள் நிலைமையை வைத்துக் கொண்டா மனித இயல்பின் நிலைமையையே தீர்மானிப்பது? விநோதமாக ஐந்து தலை கொண்டு பிறக்கும் ஆட்டுக் குட்டியை வைத்துக்கொண்டா ஆடுகளுக்கு வழக்கமாக எத்தனை தலை உண்டு என்பதைத் தீர்மானிக்கிறோம்? பெரும் பாலோர் நிலைமையிலிருந்து பொது நிலைமையை உணர்ந்து, மற்ற யாவற்றையும் விநோதப் பிறவி என்போம். கோடானுகோடி மக்களுடைய உணர்வில் முன் பிறவியைப் பற்றிய எந்த நினைவும் இல்லை. மனித உடல் உயிர் ஒன்றிப்பையும் ஆள் தன்மையையும் பார்க்கும்போது பிறப்பு ஒன்றே என்பது உறுதியாகிறது. எனவே ஒரு கோடியில் ஒருவர் இப்படி முன் பிறவியில் செய்தவற்றின் நினைவுடன்

பிறந்ததாகச் சொன்னார் என்றால் அதற்கு வேறு ஏதாவது விளக்கம் தேடவேண்டும்.

பத்திரிகைகள் சொல்வது உண்மை தானா? அந்தப் பிள்ளைகட்கு ஏதாவது ஒரு விசேஷப் பக்குவம் மிகுந்து கிடைக்கப்பெற்று, தமக்கு முந்திய காலத்தில் நடந்தவற்றை, சித்தர்கள்போல் தெளிந்து உணர்ந்து கூறலாம் அல்லவா? ஏதாயிருந்தாலும், அது முன்பிறவியின் காரணத்தால் அல்ல. ஏனென்றால் அப்படிப்பட்ட பிறவி என்பதே இருந்திருக்க முடியாது.

உயிர் நித்திய நன்மை தின்மையில் ஈடுபட்டு நிற்கும் என்பது இறைவனே சொல்லி நாம் அறிந்தது. எனவே பிறவிக் கடல் இல்லை.

ஒன்றே வாழ்க்கை. இவ்வொரு வாழ்க்கையிலேயே நன்று செய்து அழியா இன்பம் எய்தும் அருள் தாரும்—சரணம்.

## 11. இன்றே நன்று செய்

புல்-நுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை ... இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேள் அலறச்
சென்றான் எனப்படுத லான்.

—(நாலடி. 29)

இப்பொழுதுதான் நின்ருன், இருந்தான், சாய்ந்தான், தன் சுற்றத்தை ஒப்பாரி வைக்க விட்டுவிட்டுப் போய்விட்டான் என்று சொல்லக்கூடியது மனித நிலைமை. திடீரென வாழ்க்கை முடிந்து விடக்கூடும்: எனவே காலம் தாழ்த்தாமல் உடனே நன்மை செய்து முக்தியைத் தேடும் வரம் தாரும்.

இந்த வாழ்க்கை முடிந்தாலும் இன்னும் ஒன்றில் பார்த்துக்கொள்ளலாம் என்று சொல்ல இடம் இல்லை. "இறந்தவர் பிறப்பதில்லை இல்லை, இல்லை, இல்லையே". எனவே இப்போது கிடைக்கும் அவகாசம் ஒன்று தான் உள்ளது. அதை வீண்போக்காமல் பயன்படுத்தி முக்தி வழிதேடும் வரம் தாரும். நன்றே செய்வேன். நன்றும் இன்றே செய்வேன்.

## 12. வாழ்க்கை இதற்கே

எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி.

அண்ட பிண்டம் அனைத்தையும்
படைத்தாய்

அம்புலியும் தொடும் மனிதரைப்
படைத்தாய்

அவர்களில் ஒன்ருய் எனையும் படைத்தாய்.
ஒன்றே வாழ்வுஇவ் உலகில் எனக்கு.
நன்றே செய்தால் நாதர்உம் அணைப்பு
தின்மை செய்தாலோ தீநிறை நரகம்
வென்றே வாழ்வேன் விலங்குணர் வுகளை
உன்திரு அருளால் உன்தாள் போற்றி
உன்அன் பிற்கே உலகை வளர்த்து
உனைவிட் டொருநொடிப் பொழுதும் பிரியா
அன்புத் தொண்டால் அனைவர்க்கும் உதவி
உன்னத முக்தியில் மூழ்கச் செய்வாயே.

---

# II. அகத்துக்கு ஒளி

## A. போற்றித் துணை தேடு

### 1. இறைவன் காப்பார்

தெரிந்தெடுக்கப்பட்ட அன்பனே! உன்னை ஆக்கிய யகோவா சொல்வதைக் கேள்: நானே உன்னை மீட்டு இருக்கிறேன். அஞ்சேல். பெயர் சொல்லி உன்னை அழைத்திருக்கிறேன். நீ என் உடைமை. நீ ஆறுகளைக் கடந்து செல்லும் போது உனக்குத் துணையாயிருப்பேன்: வெள்ளப் பெருக்கு உன்மேல் புரண்டு ஓடாது. நீ நெருப்பில் விழுந்தாலும் எரிந்து போகமாட்டாய்: நெருப்பு உன்னைச் சுடாது. யகோவா ஆகிய நான் உன் இறைவன். இஸ்ராயேலே! நானே உன்னை மீட்பவன்.

(இசையாஸ் 43 : 1-3)

## 2. உமைப் போற்றினேன்

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்(து)
உன் விரையார் கழற்கு என்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பி உள்ளம்
பொய்தான் தவிர்ந்(து) உன்னைப் போற்றி
சய சய போற்றி என்னும்
கைதான் நெகிழவிடேன் உடையாய்
என்னைக் கண்டுகொள்ளே.

(திருவாசகம் 5 : 1)

கரங்குவிவார் உள்மகிழும் கோன் கழல்கள் வெல்க. சிரம் குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க. ஈசன் அடி போற்றி எந்தை அடி போற்றி! தேசன் அடி போற்றி! சேசு அடி போற்றி! நேயத்தே நின்ற நிமலன் அடி போற்றி! ஆராத இன்பம் அருளும் மலை போற்றி! இமைப் பொழுதும் என் நெஞ்சின் நீங்கா தான் தாள் போற்றி!

(தி. வா.)

3. ஆட்கொண்ட மாண்பு

தெய்வம் என்பதோர் சித்தமுண் டாகி
முனிவி லாததோர் பொருள்அது கருதலும்
ஆறு கோடி மாயா சக்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின
ஆத்த மாளுர் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்றம் என்னும் தொல்பசுக் குழாங்கள்
பற்றி அழைத்துப் பதறினர் பெருகவும்
விரத மேபர மாகவே 'தியரும்
சரத மாகவே சாத்திரம் காட்டினர்
சமய வாதிகள் தத்தம் மதங்களில்
அமைவதாக அரற்றி மலைந்தனர்
மிண்டிய மாயா வாதம் என்னும்
சண்ட மாருதம் சுழித்(து) அடித்(து)
ஆர்த்(து)

லோகா யதனெனும் ஒண் திறன் பாம்பின்
கலாபே தத்த கடுவிடம் எய்தி
அதில் பெரும் மாயை எனைப்பல சூழவும்
தப்பா மேதாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத்
தொழுதுளம் உருகி அழுதுடல் கம்பித்(து)
ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்

கொடிரும் பேதையும் கொண்டது விடா
தெனும்
படியே ஆகிநல் இடையரு அன்பில்
பசுமரத் தாணி அறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடலென மறுகி
அகங்குழைந்(து) அனுகுல மாய்மெய்
விதிர்த்துக்
சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுதல் இன்றி
சதுர்இழந்து அறிமால் கொண்டு சாரும்
கதியது பரமா அதிசய மாகக்
கற்று மனமெனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வம் கனவிலும் நினையா(து)
அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபரன் ஆகி அருளிய பெருமையைச்
சிறுமைஎன்(று) இகழாதே திருவடி
இணையைப்
பிரிவினை அறியா நிழலதுபோல
முன்பின் ஆகி முனியா(து) அத்திசை
என்புநைந் துருகி நெக்கு நெக்கேங்கி
அன்பெனும் ஆறுகரையது புரள
நன்புலன் ஒன்றி நாதாஎன்(று) அரற்றி

உரைதடுமாறி உரோமம் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித்(து) இருதய மலரக்
கண்களி கூர நுண்துளி அரும்பச்
சாயா அன்பினை நாள்தொறும் தழைப்பவர்
தாயே ஆகி வளர்த்தனை போற்றி
மெய்தரு வேதிய னாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி
ஆடக மதுரை அரசே போற்றி
கூடல் இலங்கு குருமணி போற்றி.
(தி.வா. 4.42-91)

செம்பொருளே !

பலகோடி மாயாசக்திகள் நிறைந்தது இவ்வுலகம். நாத்திகம், லோகாதயம், சுற்றம், சமயவாதம் ஆகிய சண்டமாருதம் சுழற்றி அடிப்பது இவ்வுலகம். இவற்றின் மத்தியில், தெய்வம் என்ற உம் சித்தம் உண்டாகி, மற்றோர் தெய்வம் கனவிலும் நினையாது வாழத்தாரும். நீரே அவனியில் குருபரனாக வந்து உணர்த்திய பெருமையை உணரத் தாரும். பிரிவினை அறியா நிழலதுபோல உம் அடிச்சுவடுகளைப் பின்பற்றும் வரம்

தாரும். அன்பு எனும் ஆறு என்னில் கரை புரண்டு ஓடச்செய்யும். ஆராத இன்பம் அருளும் மலையே போற்றி !

4. உம் நலமும் பெருமையும்

ஊனாய் உயிராய் உணர்வாய் என்உட்கலந்து
தேனாய் அமுதமுமாய் தீங்கரும்பின்
கட்டியுமாய்
வானோர் அறியா வழிஎமக்குத் தந்தருளும்
தேனார்மலர்க்கொன்றைச் சேவகனார் சீர்
ஒளிசேர்
ஆனா அறிவாய் அளவிறந்த பல்உயிர்க்கும்
கோனாகி நின்றவா(று) கூறுதுங்காண்
அம்மானாய்
(தி.வா. 8 : 16)

5. ஜெப வரம் வேண்டும்

நல்லாரைக் காண்பதுவும் நன்று. நல மிக்க நல்லார் சொற் கேட்பதுவும் நன்று. என் தேவைகள் அனைத்திலும் நட்பு காட்டும் பிறரை நாடுகிறேன். நேரப்போக்குக்காக வும் பிறருடன் உரையாடிக் களிப்படை

கிறேன். இதனுல் பிறருடன் ஒன்றுபட்டு உதவிபெற்று வாழ்கிறேன்.

எனக்கு உதவக்கூடிய அனைவருக்கும் மேலான உபகாரி நீரன்றோ! அம்மையப்பன், ஐயப்பன், தோழன், துணைவன், வழிகாட்டி, தலைவன், அரசன், அன்புக் குழந்தை அனைத்தும் நீரன்றோ! உலக மாந்தர் தோழமை, உதவியைவிட உம்தோழமை, உதவி ஒப்பில்லாப் பெருமை வாய்ந்ததல்லவா:

எனவே பிறர் தோழமை, உதவியை நாடும் நான் முதன்முதல் உம் தோழமை, உதவியை நாடுவதவசியமன்றோ! உம்முடன் உரையாடி சகலத்திலும் உம் உதவியை நாடுவதே ஜெபம். முக்தியால் உம்முடன் ஈடுபட்டு வாழும் வாழ்க்கையை இங்கேயே துவக்கி வைப்பதுதான் ஜெபம்.

நீர் என்னை ஈர்த்துக் கவர்ந்தாலொழிய நான் உம்மை நெருங்கிப் பேசமுடியாது. எனவே நீரே எம்மை இழுத்து அயராது உம் தோழமை, உதவியை நாடி பக்குவம் அடைந்து முக்திபெறும் வரம் தாரும்.

தாரும். அன்பு எனும் ஆறு என்னில் கரை புரண்டு ஓடச்செய்யும். ஆராத இன்பம் அருளும் மலையே போற்றி!

## 4. உம் நலமும் பெருமையும்

ஊனாய் உயிராய் உணர்வாய் என்உட்கலந்து
தேனாய் அமுதமுமாய் தீங்கரும்பின்
கட்டியுமாய்
வானோர் அறியா வழிஎமக்குத் தந்தருளும்
தேனார்மலர்க்கொன்றைச் சேவகனார் சீர்
ஒளிசேர்
ஆனா அறிவாய் அளவிறந்த பல்உயிர்க்கும்
கோனாகி நின்றவா(று) கூறுதுங்காண்
அம்மானாய்
(திவா. 8:16)

## 5. ஜெப வரம் வேண்டும்

நல்லாரைக் காண்பதுவும் நன்று. நல மிக்க நல்லார் சொற் கேட்பதுவும் நன்று. என் தேவைகள் அனைத்திலும் நட்பு காட்டும் பிறரை நாடுகிறேன். நேரப்போக்குக்காக வும் பிறருடன் உரையாடிக் களிப்படை

கிறேன். இதனால் பிறருடன் ஒன்றுபட்டு உதவிபெற்று வாழ்கிறேன்.

எனக்கு உதவக்கூடிய அனைவருக்கும் மேலான உபகாரி நீரன்றோ! அம்மையப்பன், ஐயப்பன், தோழன், துணைவன், வழிகாட்டி, தலைவன், அரசன், அன்புக் குழந்தை அனைத்தும் நீரன்றோ! உலக மாந்தர் தோழமை, உதவியைவிட உம்தோழமை, உதவி ஒப்பில்லாப் பெருமை வாய்ந்ததல்லவா:

எனவே பிறர் தோழமை, உதவியை நாடும் நான் முதன்முதல் உம் தோழமை, உதவியை நாடுவதவசியமன்றோ! உம்முடன் உரையாடி சகலத்திலும் உம் உதவியை நாடுவதே ஜெபம். முக்தியால் உம்முடன் ஈடுபட்டு வாழும் வாழ்க்கையை இங்கேயே துவக்கி வைப்பதுதான் ஜெபம்.

நீர் என்னை ஈர்த்துக் கவர்ந்தாலொழிய நான் உம்மை நெருங்கிப் பேசமுடியாது. எனவே நீரே எம்மை இழுத்து அயராது உம் தோழமை, உதவியை நாடி பக்குவம் அடைந்து முத்திபெறும் வரம் தாரும்.

தாரும். அன்பு எனும் ஆறு என்னில் கரை புரண்டு ஓடச்செய்யும். ஆராத இன்பம் அருளும் மலையே போற்றி!

4. உம் நலமும் பெருமையும்

ஊனாய் உயிராய் உணர்வாய் என்உட்கலந்து
தேனாய் அமுதமுமாய் தீங்கரும்பின்
கட்டியுமாய்
வானோர் அறியா வழிஎமக்குத் தந்தருளும்
தேனார்மலர்க்கொன்றைச் சேவகனார் சீர்
ஒளிசேர்
ஆனா அறிவாய் அளவிறந்த பல்உயிர்க்கும்
கோனாகி நின்றவா(று) கூறுதுங்காண்
அம்மானாய்
(தி.வா. 8 : 16)

5. ஜெப வரம் வேண்டும்

நல்லாரைக் காண்பதுவும் நன்று. நல மிக்க நல்லார் சொற் கேட்பதுவும் நன்று. என் தேவைகள் அனைத்திலும் நட்பு காட்டும் பிறரை நாடுகிறேன். நேரப்போக்குக்காக வும் பிறருடன் உரையாடிக் களிப்படை

கிறேன். இதனால் பிறருடன் ஒன்றுபட்டு உதவிபெற்று வாழ்கிறேன்.

எனக்கு உதவக்கூடிய அனைவருக்கும் மேலான உபகாரி நீரன்றோ! அம்மையப்பன், ஐயப்பன், தோழன், துணைவன், வழிகாட்டி, தலைவன், அரசன், அன்புக் குழந்தை அனைத்தும் நீரன்றோ! உலக மாந்தர் தோழமை, உதவியைவிட உம்தோழமை, உதவி ஒப்பில்லாப் பெருமை வாய்ந்ததல்லவா:

எனவே பிறர் தோழமை, உதவியை நாடும் நான் முதன்முதல் உம் தோழமை, உதவியை நாடுவதவசியமன்றோ! உம்முடன் உரையாடி சகலத்திலும் உம் உதவியை நாடுவதே ஜெபம். முக்தியால் உம்முடன் ஈடுபட்டு வாழும் வாழ்க்கையை இங்கேயே துவக்கி வைப்பதுதான் ஜெபம்.

நீர் என்னை ஈர்த்துக் கவர்ந்தாலொழிய நான் உம்மை நெருங்கிப் பேசமுடியாது. எனவே நீரே எம்மை இழுத்து அயராது உம் தோழமை, உதவியை நாடி பக்குவம் அடைந்து முக்திபெறும் வரம் தாரும்.

தாரும். அன்பு எனும் ஆறு என்னில் கரை புரண்டு ஓடச்செய்யும். ஆராத இன்பம் அருளும் மலேயே போற்றி!

### 4. உம் நலமும் பெருமையும்

ஊனாய் உயிராய் உணர்வாய் என்உட்கலந்து
தேனாய் அமுதமுமாய் தீங்கரும்பின்
கட்டியுமாய்
வானோர் அறியா வழிஎமக்குத் தந்தருளும்
தேனார்மலர்க்கொன்றைச் சேவகனார் சீர்
ஒளிசேர்
ஆனா அறிவாய் அளவிறந்த பல்உயிர்க்கும்
கோனாகி நின்றவா(று) கூறுதுங்காண்
அம்மானாய்
(தி.வா. 8:16)

### 5. ஜெப வரம் வேண்டும்

நல்லாரைக் காண்பதுவும் நன்று. நல மிக்க நல்லார் சொற் கேட்பதுவும் நன்று. என் தேவைகள் அனைத்திலும் நட்பு காட்டும் பிறரை நாடுகிறேன். நேரப்போக்குக்காக வும் பிறருடன் உரையாடிக் களிப்படை

கிறேன். இதனால் பிறருடன் ஒன்றுபட்டு உதவிபெற்று வாழ்கிறேன்.

எனக்கு உதவக்கூடிய அனைவருக்கும் மேலான உபகாரி நீரன்றோ! அம்மையப்பன், ஐயப்பன், தோழன், துணைவன், வழிகாட்டி, தலைவன், அரசன், அன்புக் குழந்தை அனைத்தும் நீரன்றோ! உலக மாந்தர் தோழமை, உதவியைவிட உம்தோழமை, உதவி ஒப்பில்லாப் பெருமை வாய்ந்ததல்லவா:

எனவே பிறர் தோழமை, உதவியை நாடும் நான் முதன்முதல் உம் தோழமை, உதவியை நாடுவதவசியமன்றோ! உம்முடன் உரையாடி சகலத்திலும் உம் உதவியை நாடுவதே ஜெபம். முக்தியால் உம்முடன் ஈடுபட்டு வாழும் வாழ்க்கையை இங்கேயே துவக்கி வைப்பதுதான் ஜெபம்.

நீர் என்னை ஈர்த்துக் கவர்ந்தாலொழிய நான் உம்மை நெருங்கிப் பேசமுடியாது. எனவே நீரே எம்மை இழுத்து அயராது உம் தோழமை, உதவியை நாடி பக்குவம் அடைந்து முத்திபெறும் வரம் தாரும்.

உம்மோடு இடைவிடாது பேசி உம் சொல் கேட்டு உம் மகிழ்வில் ஈடுபட்டு வாழும் வரம் தாரும்.

## 6. பெரியவர்க்காக வேண்டுதல்

அம்மையப்பனே!

என்மேல் எத்துணை அன்பு உமக்கு! உம் அழியா இன்பத்தை நான் சம்பாதித்து அனுபவிக்க வேண்டுமென்று என்னை இவ் உலகில் வைத்தீர். உம்மை அறிந்து, அன்பு செய்து, உமக்கும் உம் மக்கட்கும் என் நிலைமைக்கு ஏற்றபடி பணிபுரிந்து, தகுந்த வெகுமானமாக உம் இன்பத்தை நான் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று என்னை இங்கு வைத்திருக்கிறீர்.

இதற்கு வேண்டிய தினசரி உதவிகளை என் தாய், தந்தையர், ஆசிரியர், குருக்கள், உற்றார், உறவினர், நண்பர், நாட்டதிபர் முதலிய அனைவரும் உம் ஏற்பாட்டுப்படி எனக்குச் செய்து வருகின்றனர். என் உடல், உயிர், அறிவு, ஆற்றல், ஆன்ம ஞானம் பக்குவம் வளரும்படி தினம் உதவி புரிகின்றனர்.

உமக்கும் இவர்கட்கும் நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன். உமக்கு நன்றி சொல்கிறேன். இவர்களுக்கு உம் அருள் ஆசீர், அழியா வாழ்வு கிடைக்கும் படி வேண்டுகிறேன். நான் பக்குவத்தில் வளர்ந்து, அதனால் தன் மகனைச் சான்றோன் எனக் கேட்டதாய் போல, நீரும் இவர்களும் உவகை பெற வேண்டுமென அருள்வீராக — சரணம்.

## 7. கீழ் உள்ளவருக்காக வேண்டுதல்

குமரக் கடவுளே,

நீர் மனு உரு எடுத்து மனிதர் கையில் வளர்ந்தீர். என் கையில் ஒப்படைக்கப்பட்ட மக்கள் (குடும்பம், மாணவ, மாணவிகள், பணியாட்கள், அதிபதிகள்) அனைவரையும் போலவே நீர் வளர்ந்தீர். இவர்கள் உம் சாயல் கொண்ட உமது மக்களே. "இவர் களுக்குச் செய்ததை எனக்கே செய்தீர்" என்கிறீர்.

எனவே இவர்களில் உம் திரு முகத்தைக் காண்பேன். உம்மை வளர்க்கும் நினைவு

டனேயே இவர்களை வளர்ப்பேன். உம்மேல் உள்ள என் அன்பையெல்லாம் இவர்கள்மேல் பொழிவேன். உமக்குப் புரிய வேண்டிய பணியை எல்லாம் இவர்கட்குப் புரிவேன். இவர்கள் நன்மை, பெருமையையே என் நன்மை பெருமையாகக் கொள்வேன்.

என்னாலான நன்மையை எல்லாம் இவர்களுக்கு நான் செய்யும்படி, இதனால் இவர்களுடைய பக்குவமும், உமது பெருமையும் ஓங்கும்படி அருள் புரிவீர் — சரணம்.

8. வேலைக்கு முன் — பின்

எனைப் படைத்த இறைவா ! எனை மீட்டு ஆட்கொண்ட சேசுவே !

உம் விருப்பப்படி இவ்வுலகை மீட்க, உம் மக்களுக்குத் தொண்டு புரிய, அன்பு செய்ய இத்தொழிலைப் புரியப்போகிறேன். (புரிந்து முடித்திருக்கிறேன்.) இதனால் உண்மையாகவே உம் விருப்பம் நிறைவேற வேண்டும். என்மேல் உமக்கு மகிழ்வு உண்டாக வேண்டும் — சரணம்.

9. படிப்பிற்குதவி

படிப்பினுள் ஊன்றிநின்று / பரன்உமை
நாடத்தாரும்
விடிந்தது தொட்டோயாது / வேந்தன்உம்
பணிஇதாக
அடியின்மேல் அடி அடித்தால் / அம்மியும்
நகருமென்று
பிடிவிடா(து) ஊன்றிநின்று / பிரியமாய்ப்
படிக்கத்தாரும்.

பூரணவெற்றி கேட்டேன் / புகழுடை
வெற்றிகேட்டேன்
காரணம் வேறொன்றில்லை / கர்த்தர்உம்
மகிமைஒன்றே
ஓரணு வும்குறையா(து) / உறுதிதெ
ளிவுடனே
வீரனுக் கேற்றவாறு / வெற்றிக்காய்ப்
படிக்கத்தாரும்.

மந்தமுற் சாகமின்மை / வரட்சிக
ளைப்பகற்றி
உந்தி விருவிருப்பாய் / உள்நோக்கும்
கூர்மையுடன்

எந்தப்பா டத்தினையும் / இறுதியைக்
காணும்மட்டும்
சிந்தித்துப் படிக்கத்தாரும் / செந்தமிழ்
நாட்டுவேந்தே.

உம்துணை யின்றிஎன்றும் / பெற்றிலேன்
படிப்பில்வெற்றி
இம்மியும் தளர்ந்திடாமல் / இடைவிடா
முயற்சியாலே
எம்முறை சாதனங்கள் / எதையுமே
மேற்கொண்டின்று
நிம்மதி நிமிர்ந்தநெற்றி / நெகிழ்வுறுப்
படிப்பைத்தாரும்.

10. ஓய்வுக்கு முன்—பின்

திறன் வடிவானதேவா!

உம் தொழில் புரிதற்கு எனக்குத் திறன் வேண்டும். அதை நீரே தரவேண்டும்.

நான் தேடும் (பெற்றிருக்கும்) இந்த ஓய்வு (உணவு, உடற்பயிற்சி, உறக்கம்) நான் புத்துயிர் பெற்று உம்பணியில் ஓங்கி வளர உதவும்படி அருள்வீராக — சரணம்!

## 11. பயணத்துக்கு முன்—பின்

என்னை நடத்துவோனே!

உம் திருவுளப்படி உம் தொழிலைச் சாதிப்பதற்கென வெளியேறுகின்றேன். எனக்கு வேண்டிய வெற்றியைத் தாரும். எனக்கு உதவவேண்டியவர் அனைவரும் நன்மனது வைத்து உதவச் செய்யும். என் தொடர்புக்கு உட்படுபவர் எல்லோரும் மேன்மை அடையச் செய்யும்.

என் புலன் உணர்விற்கு உட்படும் எப்பொருளும் எனக்கும் உலகிற்கும் நன்மை பயக்கச்செய்யும். தீய சக்திகளின் வலைகளில் நான் சிக்கி விடாமல் காத்தருளும்.

இதனால் உமக்கும் எனக்கும் என்றென்றும் பெருமை உண்டாகவேண்டும் —

சரணம்!

## 12. நோய் நொடியில்

ஆதன் பவ வினையால் அத்தனை துன்பங்களும் வந்து விடிந்துவிட்டன. ஆனால் பவங்கட்கு உம்மோடு சேர்ந்து பரிகாரம் செய்ய இவையே ஒரு சாதனமாகவும் இருக்

கின்றன. உம்மேலுள்ள பற்றுதலே உறுதிப் படுத்தவும் இவை உதவுகின்றன. இன்னும் எந்த நன்மைக்காக வெல்லாம் இவற்றை வரவிட்டிருக்கிறீரோ!

ஆனால் எனது அதிகமான நன்மைக்கும் உமது பெருமைக்கும் உதவுமானால் இந்நோய் (துன்பம்) நீங்கும்படி செய்யும். இது இருக்கும்போது மகிழ்வுடன் உமக்காக இதை அனுபவிக்கும் வரம் தாரும் — சரணம்!

## 13. சாவுக்கு ஆயத்தம்

பிறந்தவர் இறப்பது நிச்சயம். இறப்புக்குப்பின் தீர்ப்பு. தீர்ப்புக்குப்பின் முடிவில்லா மோட்ச, நரகம். முத்தி வாசலே மரணம்.

என் வாழ்க்கை இதுவரை எப்படி இருந்தாலும் எனைக் கருணை கூர்ந்து நோக்கும். என் குற்றங்களை நீக்கும். அவற்றிற்கு வருந்தி ஈடுசெய்யும் அருள்தாரும். என் குறைகளை நிவர்த்திசெய்து பக்குவங்களைப் பெருக்கும்.

என்னுள் புகுந்து, ஆட்கொண்டு, இரண்டறக் கலந்து, மரித்ததும் உம்மிலேயே ஆழ்ந்து நிற்கும் அருள்புரியும் — சரணம்!

**14. சாவுக்கு ஏங்குதல்**

ஆற்றகில்லேன் அடியேன் அரசே/அவனி தலத்து ஐம்புலனாய் || சேற்றில் அழுந்தாச் சிந்தை செய்து / சேசு எம்பெருமான் என்று ஏத்தி || ஊற்று மணல்போல் நெக்கு நெக் / குள்ளே உருகி ஓலமிட்டுப் || போற்றி நிற்ப தென்று கொல்லோ என் / பொல்லா மணியைப் புணர்ந்தே.

(தி.வா. 27 : 2)

## B. பாவம் போக்கு

**1. எது பாவம்?**

இறைவா உம் ஆணையை மீறுவதே பாவம். உம் ஆணை: உம்மை நான் வழிபட வேண்டுமென்பது: நீர் விரும்பும் முறையில் உமை வழிபட வேண்டுமென்பது! அந்த முறை எதுவெனத் திறந்த மனதுடன் தேட வேண்டுமென்பது.

உம் ஆணை பெரியவர் சொல் பேண வேண்டுமென்பது. உம் ஆணை பிறர்க்கன்பு காட்ட வேண்டுமென்பது: என்னைப்போல

என் பிறனையும் நேசிக்க வேண்டுமென்பது! பொய், களவு, காமத்தை நீக்க வேண்டுமென்பது.

உம் ஆணை என் மனச்சான்றின்படி நடக்க வேண்டுமென்பது.

உம் ஆணையை எத்தனையோமுறை மீறியிருக்கிறேன். உமக்கு வருத்தம் உண்டாக்கியிருக்கிறேன். உம் திரு மகன் எனக்காகச் சிலுவையில் கொடிய மரணமடையக் காரணமாயிருந்திருக்கிறேன். என் பாவத்தை ஏற்றுக்கொண்டு வருந்திப் பரிகாரம் தேடும் வரம் தாரும்.

என்னுடைய பாவங்களை/எடுத்துரைத்திடும் எந்தையே
நன்றெனக் குணர்த்திடீரோ / நாறும்என் பாவக்கோலம்
நின்றினிப் பாவச்சேற்றில் / நெளியவே மாட்டேன்ஐயா
ஒன்றுதான் எனக்குவேண்டும் / உமதருள் நேசவாழ்வு.

தாரீரோ தண்ணரசே / தப்பறை
கள்உணர்வை
பாரீரோ உடனிருந்து / பழுதுகள் நிறை
இடத்தை
வாரீரோ வகைவகையாம் / பாவங்களை
எடுத்துக்காட்ட
கோரீரோ மாலையாய்எம் / குற்றங்கள்
யாவும்கொண்டு.

கொண்டுவந் தெனக்குத்தாரும்/குறைகளின்
உள்உணர்வை
மூண்டிஎ ழுந்துதாக்கும் / மூர்க்கதற்
பெருமையையும்
கண்டுள சுயநலங்கள். / காந்திடா
பிறர்பேரையும்
பண்டிருந் தெனைப் பேணும்உம் / பதம்
தொழாப் பவத்தையுமே

செய்தவை யாவற்றையும் / செம்பொருள்
உம்சட்டத்தால்
மையல்எ துவுமின்றி/மதிப்பிட்டுப் பார்க்கத்
தாரும்
துய்த்தநா மெய்சுகங்கள் / தூயர்உமைப்
பழித்திட்டதால்
எய்திலேன் பவநிலையை / எனினும்இனி
விலக்கத்தாரும்.

2. விதி இது ?

இன்பம் துன்பம் யாவும் உமக்கே.
வேதன் உம் சொல் லன்றி விதிவே றில்லை.
காலை மாலை கடவுளை வணங்கு.
அனைத்தையும் செய்வாய் அவன்அன்
பிற்காய்.
செய்வன திருந்தச்செய் சேசுவின்
அன்பால்.
அல்லும் பகலும் அயரா துழை.
வெற்றிக் கென்றே வீரத் தோடுழை.
எப்பொருள் தனிலும் மெய்ப்பொருள் தேடு.
மதியின் வழியே கதியென ஓதி — அம்
மதியின் ஒளியை மங்கடிக் காதே.
மனச்சான் றிற்கு மறுசொல் வேண்டாம்.
அனைத்தையும் இழப்பினும் அரிச்சந்
'திரன்போல்.
தினைத்துணைப் பொய்யும் தீர்த்தே
வாழ்ந்திடு.
வணக்கத் தொடுநினை வானவர் பெயரை.
ஊருடன் கூடி உன்னத னைத்தொழு.
சேற்றுடன் செல்லேல் தேவன் திருமுன்.
காணிக்கை இன்றிக் கடவுள்முன் செல்லேல்.
பலியில் நெருங்கிப் பங்கெடுத் துக்கொள்.
பகைஎதும் இன்றிப் பரன்முன் செல்வாய்.

ஙப்போல் வளை.
நியாயத்துக் கடங்கு.
பெரிவர் பேணு.
சிறியரென் றிகழேல்.
கிழவரென் றொதுக்கேல்.
பழமையைப் பழியேல்.
ஞானம் கற்பி.
தாழ்ந்தே உரை.
நல்வழி நடத்து.
தீ வழி காட்டேல்.
அன்புடன் கண்டி.
கோபம் வேண்டாம்.
வெற்றி பா ராட்டு.
தோல்வியில் ஊக்குவி.
அனைவர்க்கும் அன்புசெய்.
பகைவர்க்கும் நன்றுசெய்.
பிறர் பிழை மறந்திடு.
பெருந்தன்மை பேணு.
குற்றம் பாரேல்.
ஊர்வம்பு வேண்டாம்.
சிறுவர்க்கும் தொண்டுசெய்.

சேசுவைப் போல் நட.
நன்றி நவின்றிடு.
நலமன்றி நினையேல்.
குத்திப் பேசாதே.
கோள் குண் டணிஒழி.
பற்றவைக் காதே.
பகைமூட் டல்தடு.
வஞ்சனை வேண்டாம்.
தஞ்சம் என் றோர் அணை
பிறர் நலம் விரும்பு
மனம்புழுங் காதே.
அடிதடி அகற்று.
கொடுஞ்சொல் விலக்கு.
வர்மம் விட்டொழி.
பழிவாங் காதே.
திட்டித் திமிரேல்.
உயிர்வதை செய்யேல்.
சிசுவையும் கொல்லேல்.
கொல்வதற் குதவேல்.
விலங்குணர் வடக்கு.
வெறிவழி செல்லேல்.
கன்னிமை பேணு.
காலத்தில் மணம்புரி.
[illegible]

இனமறிந் திணங்கு.
குலமறிந் துறவுசெய்.
இழிசொல் இயம்பேல்.
கெட்டதற் கேங்கேல்.
இச்சைக் கிடம்கொடேல்.
வித்தைவீ ணுக்கேல்.
வீண்கனா வகற்று.
இறைதுணை தேடு.
மேனி மினுக்கேல்.
மனைஅன்றி நினையேல்.
குடும்பம் காப்பாற்று.
கூடி ஜெபம்செய்.
பிணக்குக் கிடந்தரேல்.
ஒற்றுமைக் குழைதினம்.
பிறர்பொரு ளெதும்தொடேல்.
நஷ்டத்துக் கீடுசெய்.

## 3. மன்னிப்புக் கோருதல்

இனிப் பவம் செய்யேன் — இறை உம் துணையால் :

உம் கட்டளையை, என் உளச்சான்று உணர்ந்து உணர்த்தும் அறவுரையை மீறி உம்மை மனநோகப்பண்ணுவதே பாவம்.

உம் கண்முன் இந்நொடியில் எவ்வாறு காணப்படுகின்றேனே, உம்முன் தீர்ப்புக்கு இப்போது தோன்றினால் என்னென்ன பாவங்கள் என்னுள் இருப்பதாக உணர்வேனே அவற்றை எல்லாம் உடனே உம் ஒளியால் உணர்ந்து பரிகாரம் தேடும் வரம் தாரும்.

உம்மை வருத்தி விட்டேனே என மனம் நொந்து, செய்த தின்மைக்கு மாற்றாக நன்மை செய்து, வருவித்த நஷ்டத்திற்கு ஈடுசெய்து, இனி நல்வழி நடப்பதற்கு உம் அருளைக் கெஞ்சுகிறேன்.

நீர் அன்பு உருவானவர்; இவ்வாழ்க்கையில் அனைத்தையும் மன்னிப்பீர். நீர் மன்னிக்காத பாவமே இல்லை. அந்த மன்னிப்பை என் மனமாற்றத்தால், பெற்று முத்திபெறும் அருள் தாரும் — சரணம்.

**4. பவத் துறவு**

1. பாவத்துக்கு அச்சம்

யாரையும் அஞ்சமாட்டேன்
எதற்குமே துணிந்து நிற்பேன்
நீரையும் நெடுங்காற்றையும்
நீற்றிடும் நெருப்பினையும்

போரையும் பொய்கள் பேசும்
போக்கிரிகளையும் அஞ்சேன்.
கீரையுண் கீடம் போன்ற
கெடும்பவம் அஞ்சுகின்றேன்.

## 2. பேய்வலைக்கு அச்சம்

எதுவும் இயல்பென்று, தந்தாய்!
ஏற்காத நியாயம் பேசி
மதுவுண்ட வண்டு போல
மயங்கியே எதையும்செய்து
புதுப்புதுச் சூழ்ச்சிகளில்
பூரிக்கும் பேயின் கையில்
பிதுங்கிடும் கண்களுடன்
பிடிபடா தென்னைக்காப்பீர்.

## 3. நரகம் வேண்டாம்

சவமும் கந்தமுமே நாறும்
சாக்கடை வந்து வீழும்
நவஇருட் படுகுழியாம்
நரவல் தீ நிறைபாதாளம்
பவமுடை எனக்குவரும்
பாகமோ வேண்டாம் வேண்டாம்
தவமின்றே செய்திடுவேன்
தந்தையே தற்காப்பீரே.

4. அன்பும் பண்பும் அறத்துக்குத் தூண்டுகோல்

அன்பினால் உந்தப்பட்டு
அற்பமும் பவம் செய்யாமல்
என்பும் உருகும் பக்தி
என்றுமே கொண்டு வாழ்வேன்
மின்னல்போல் மனம் கலக்கும்
மிஞ்சிய சோதனையால்
அன்பினை மறந்தால் எந்தாய்
ஆதரிப்பீர் பயத்தால்.

5. செய்ததற்கு வருந்துகிறேன்.

எந்தையாம் பிதா சுதனே
இனியநல் ஆவிதேவா
நொந்துநான் வருந்துகின்றேன்
நுகர்ந்திட்ட பாவங்கட்காய்
சிந்திய கண்ணீருடன்
செய்திட்டேன் நல்தீர்மானம்
வந்தெனை ஆதரித்து
வளர்த்திடும் உம் அருளில்.

## அர்ப்பணம்

ஒவ்வொரு க்ஷணமும் உம்பணி செய்வேன்
ஒவ்வொரு மூச்சும் உமக்காய் விடுவேன்
ஒவ்வொரு செயலும் உமது வெற்றிக்கே
ஒவ்வொரு நொடியும் உடனிரும் அன்பா.

அழிந்தன பாதகம் அனைத்தும் என் அரசே
ஒழிந்தன கலக்கம் ஒருங்காய் வேந்தே
வழிந்தன உளத்துள் வரப்பிர சாதங்கள்
கழிந்தன எல்லாக் கயமையும் அன்பா.

நன்றியை ஏற்பீர் நாதா என் அன்பரே
வென்றீர் இன்றே வேந்தர்என் உளத்தை
இன்றிலி ருந்துநான் இன்னருள் அகற்றேன்
நன்றிஎன் நேசரே நவிலறு நன்றி.

அன்புடை நேசரே அரவணைப் பீர்எனை
துன்புறும் வேளையில் தூரம் செல்லாமல்
என்பும் இளகிடும் இனியஉம் அன்பால்
இன்புறச் செய்வீர்என் ஏகமா நண்பரே.

உம்கொடிக் கீழே உய்த்திடத் தாரீர்
சம்மதம் எனக்குநீர் தரும் எந்தநிலைமையும்
நம்தொழில்யாவும் நரர் இரட்சிப்பைச்
செம்மையாய் எய்தச் செய்வீர் எம்வேந்தே!

## C. பக்குவ வாழ்க்கை

### 1. "என் வழி நட"

"போனதுபோகட்டும் புனிதரின்
வாழ்வினில்
புகுந்திட உனக்கினி ஆசையோ?"
"நானதை மட்டுமே நாடினேன் நேச
நாதரே காட்டுமென் பாதையை".
"வானவர் துணையாய் வருவாய் என்பின்"
"வந்தேன் இன்றே, எம்வேந்தரே!
பானம் ஊண்உடை பகலிராத் தொழிலெதும்
பார்த்திடேன் உமதன்றி வேறிலை".

### 2. யாவும் உம் அன்புப் பணிக்கே

அருள்நிறையுளத்தால் அயரா ஜெபத்தால்
ஆசிப்ப தும்பணி நேசமே
கருணை நோக்கால் கடுஞ்சொல் களைந்து
காட்டுவதும் பணிநேசமே
இருள்தரும் எதையும் நான் ஏறிட்டும்
பாரேன்
ஏங்குவ தும்பணி நேசமே.
தருமமாம் தமிழுரைத் தயங்காமல்
கேட்பதும்
தற்பரன் உம்பணி நேசமே.

3. அன்னையின் துணை

கருணையும் திறனும்வாய்ந்த கன்னிமா
தாவே அம்மா
விரும்பினை நேர்ந்துவிட்டேன் வேதன்தாய்
உம்பணிக்கு
அருள்நிறை தேவஉள்ளத் தாழ்ந்தெனை
மூழ்கச்செய்தும்
திருவுளத் திருப்திக்கேற்ற திருமக ளுக்ச்
செய்வீர்.

4. பாலன் வழி

திட்டம் வெற்றியெனப் — பாலகனே
தேடித் திரிபவரைப் — பாலகனே
மட்டம் தட்டுவதோ — பா......
மனிதவ தாரமெங்கள் — பா......
பிள்ளையே யானாலும் — பா......
பிடித்தவ ராவீரோ — பா......
நள்ளிரவில் வந்ததேன் — பா......
நாடாள்வார் அறியாமல் — பா......
இடையர் தோழமைஏன் — பா......
ஏரோதைப் பழித்ததேன் — பா......

படைக ளைத்துறந்த — பா......
பழிக்குத்தான் ஆளானீர் — பா......
விரட்டுவான் மன்னனுமை — பா......
விரும்பிடார் குருக்களும் — பா......
பரம்பொருள் ஞானமாம் — பா......
பகுத்தறி யாததேனே — பா......
உண்மையை நாடினேம் — பா......
உள்ஒளியைப் பின்வந்தோம் — பா....
விண்ணின் பெருமையொடு — பா......
வேந்தாய் உமைநினைத்தோம் — பா...
நாடவர் பழித்துரை — பா......
பூணது வாய்க்கொண்டோம் — பா...
மாட மாளிகையில் — பாலகனே — நீர்
மகிழ்ந்திருக்க விரும்பினேம் — பா...
எல்லாம் துறந்திட்டோம் — பா......
ஏகனும் பெருமைக்காய் — பா......
நல்லா யிருக்கிறதா — பா......
நரர்பழியை நீர்தேடல் — பா......

போது முன்பிதற்றல் — என்வீரா
புரியாது பேசாதே என்வீரா
ஓது நித்தமுமே — எ. வீ......
உன்ஞானம் என்தன்றென் —
றென்வீரா

அதிகம் கேட்கவில்லை — என்வீரா
அருகிருந்தெனை நோக்கு — என்வீரா
மதியும் மற்றவையும் — என்வீரா — சற்று
மறந்துவிடு சொல்வேன்பின் —
என்வீரா

கள்ளம் கபடுண்(டு) இதில் — என் வேந்தே
உள்ளம் — கொள்ளை கொள்பவர் நீர் —
என் வேந்தே
அள்ளி எறிந்திடுவீர் பாலகனைய் — மெல்ல
அருள்வ லையினையே — உலகின்மேல்
கருமமே கண்ணேனும் — பாலகனே
அந்தக்கருமந்தான் தெரியவில்லை — பா...
தருமநூல் சொல்லித்தரும் — பா......
தாரீரோ மெய்ஞானம் — பா......
உலகை மனந்திருப்ப — பா......
அவமானம் தேடுவதேன் — பா......
மாளிகை கட்டுதற்கு — பா......
மண்ணினுள் மடிவரோ — பா......
பரிகரி என்பீரோ — பா...... — மண்ணைப்
பணியவும்செய் என்பீரோ — பா......

விரிகரம் கொண்டழைக்கும்—பா...— இவை
விகற்பமன்றென் றுரைத்திடும் — பா...
சாஸ்திரங்கள் பின்னாலே—என்வீரா—உடன்
சரிஎன்றென் பின்வாராய் — என்வீரா.

## 5. நிந்தை வேட்கை

திரைகடல் ஓடியும் — என்வேந்தே
திரவியம் தேடினர் — என்வேந்தே
நரைவிழுந்த பின்னும் — என்......
நாடினர் மகிமையையே — என்......
மனிதர் ஞானமிது — என்......
மகிமை பெருமைதேடல் — என்......
இனிதே தாரீரோ — என்......
இவற்றைக் களைந்தெறிய — என்......
வேட்கை விருப்பமும் — என்......
நாட்ட தேட்டமும் — என்......
ஈட்டும் செல்வமும் — என்......
ஏளன நிந்தைகளே — என்......
ஏறிட்டுப் பார்ப்பாரற் — றென் வேந்தே
இழிவும் மேற்கொண்ட — என். வே......
நீறிக் கொதிப்பதெப்போ — என். வே......
நிந்தையால் என்உள்ளம் — என். வே...

பவமற்ற அலட்சியம் — என். வே......
சவமாயும் கருதப்படல் — என். வே......
நவமான உம் பணியில் — என். வே......
நல்கீரோ உம் துணையோ —
டென்வேந்தே.

6. கருமமே கண்

சேசு வேந்தே! செந்தமிழ் மன்னு!
அங்கயற் கொடியோனே!

1. எப்பொருள்மீதும் மண், விண், தாது தாவர, விலங்கு, திறமை, தோழர், தொழில், பலாபலன், சூழ்நிலை, சம்பவங்கள், இனியவை, இன்னுதவை எதன்மேலும் விருப்பு வெறுப்பற்ற நடு நிலையைத்தாரும்.

2. தேவமகிமைக்கு, உம் திருக்கட்டளைக்கு, என்னிடம் ஒப்படைக்கப்பட்ட வேலையின் பூர்ண வெற்றிக்கு, உம்மிடமிருந்து நான் பெற்றுள்ள மீட்புப் பணிக்கு அமைபவை ஒன்றையே நாடித்தேடி, நுணு நுணுக்கமாய், அணுவும் கைமீறி விடாமல், ஆய்ந்து திட்டம் செய்து, தீர்க்கமாய் வெற்றி பெற்றே தீருவேன் என முனைந்துநின்று, வெற்றியை அடையவும் தாரும்.

3. என் கையிலில்லாத காரியங்களில் நடுநிலை(யின் முள்) தவறுனபுறம் மிஞ்சி இறங்கி விடாதபடி, இனியவற்றைவிட இன்னுதவற்றையே சற்று அதிகம் விரும்பி நிற்கத் தாரும்.

4. பூரண சுதந்திரம் உள்ளவற்றில் (அப்படி ஏதாவது வாய்த்தால்) உமது அன்புத் தோழமையின் பொருட்டு இன்னுதவற்றையே தெரிந்தெடுத்துக் கொள்ளும் வரம் தாரும்.

7. உம் தோழமை

சேசுவே!

கருமமே கண்ணுக நான் நாடித்தேடுவது நீரொன்றே. ஆகையால் ஆசை, ஆர்வ வேட்கையோடு அணிந்து மகிழ்வது உமது அபராதிகளே!

தேவனுக்கு எந்த விதத் துரோகமும் ஏற்படாமல், ஒருவரும் பாவம் செய்யாமல், நானும் அதற்கு (இப்போதிருந்தாவது) எந்த விதத்திலும் இடம் கொடாமலிருக்கும் போது, கஸ்தி நிந்தைகளை எனக்காக அனுப்பிவித்த உமது அன்புத்தோழமை எனக்குக் கிடைக்க வேண்டுகிறேன்.

உலகை மீட்கும் உம் சிலுவை அவமான துன்பங்களில் பங்கெடுத்துக் கொள்வதே என் மீட்பு, பக்குவ வாழ்க்கை, இதே கிறீஸ்துவ வழியின் விசேஷம்.

உலகில் மனிதர் தேடும் மகிமை பெருமையையும், பெரியவன் என யாவரும் போற்றும் பேர், புகழ்ச்சியையும், அடியோடு முழுவதும் பகைத்து வெறுக்கிறேன்; அஞ்சித் துறக்கிறேன்.

எனது நிந்தை வேட்கை நம் தொழிலின் வெற்றிக்கொடிக்கு அணுவளவும் தீங்கிழைக்காமல் பார்த்துக் கொள்ளும் அன்பும் ஆற்றலும் மிக்க வேந்தர் நீரே — சரணம்.

அனல் கொழுந்திட்டுக்காயும்
அடுப்பொத்த சுற்றத்தோடும்
மனம் இசைந்தும்மைப்போற்ற
மன்னரே முன்வந்துள்ளேன்
தினமும்சற் றேனும்நீறித்
தீயினில் அசடகற்றி
இனத்தவர்க்கொளி கொடேனோ
இனியஎம் தமிழர்வேந்தே

தமியரின் மீட்புவேலை
    தரணியின் புகழ்பெறவோ
அமிலம்போல் உடல் உயிரை
    அரித்து உரு மாற்றிநம்மை
உமிழ்ந்தகற் றன்பருக்கும்
    உள்உயி ராகமாறி
நிமிர்ந்தெழும் சிலுவையிலே
    நித்தியரோ டொன்றலன்றோ!

8. யாவும் உம் மகிமைக்கே

என்குறை எதுவரினும்
    ஏகனே இனிது நீக்கி
இன்னருள் தேடிவந்தோர்க்(கு)
    ஈவீரே உம் அருளை
டன்னரும் உம்மகிமை
    ஒன்றுதான் மிளிரவேண்டும்
என்பறுபுழு எனக்கோ
    ஏற்றவை நிந்தைகளே.

9. லயிப்பு

கரமலர் மொட்டித்த / துளமலர் குவிந்தது
பரனும்மேல் பாய்ந்தன / பரவசம்
புலனெல்லாம்
சிரமுளம் நோக்கிற்று / செவிக்கண் உள்
ஒடுங்கின
தரம் உணர்ந்த தடங்கின / தாள்கள்
இரண்டுமே.

உளத்தினுள் உமைக் கண்டேன் / உலகெலாம்
மறந்திட்டேன்
உளம்மிளிர் ஒளிஉமை / ஒன்றையே
ஓர்ந்திட்டேன்
உளம்விடா துய்யும்நீர் / ஒளித்திட்டீர்
அல்லவே
உளஇருள் வேளையும் / உடன்வதி வேந்தரே.

பல்தொழில் புரிந்திட்டேன் பரன்உமை
உளம்கண்டே
நலமெலாம் நாடிட்டேன் நரர்க்குமைத்
தந்திட்டேன்
மலமணம் நுகர்ந்தோர்க்கு மன்னித்தேன்
உம்மொடு
குலவித்தை இதுவெனக் கும்பிட்டேன்
உம்கழல்.

பரவச நிலையிலும் பாசங்கள் பலகண்டேன்
கரம்பிடித் தாடின கால்களை இருத்தன
நரம்பெலாம் நடுக்கின நாய்கள்போல்
குரைத்தன
மரத்தஎன் உள்ளமும் மசியுமோ மன்னரே!

நாகங்கள் சீறின நரகங்கள் மீறின
தாகங்கள் கிளம்பின தலைவிரித்தாடின
மேகங்கள் மூடின மின்னலோ டடித்தன
வேகம்கொள் நெஞ்சிதில் வியப்பில
தென்றுளேன்

எதற்குமே மசிந்திடேன் ஏங்கிட்டேன்
உம்துணைக்
கெதற்குமே நலிந்தில தெளிய என்
உள்ளமும்
சதமென லயித்தது சற்குரு உம்பதம்
சிதறிடா என்உளம் சிவம்உமைத் தேடியே

பிறஎதும் மறந்திட்டேன் பிறங்கொளி
தேடுவோன்
நிறமிலா நேசரே நெகிழ்வுரு அன்பரே
கரந்தபால் போன்றஎம் கன்னலே
கண்ணனே
திறந்திடும் என்மேல் தேவனும் அருள்களை

## 10. பண்டிகை

1. பண்டிகைத் தீவாளிப் பண்டிகையாம்
இந்தப் பாரதநாட்டுக்கோர்
பண்டிகையாம்
கொண்டாடவேண்டிய ஓர்நாள் ஈதென்று
கும்மியடியுங்காள் பிள்ளைகளே

2. கோலமும் தோரணம் குற்றுவிளக்கும்நம்
கும்மியும் கொற்றவன் பண்டிகைக்கே
தாலம் நிறையவே சாதம்வைத் துண்டவன்
தாள்பணிந் தாடுங்காள் பிள்ளைகளே

3. வண்ணமத் தாப்பும் வாணவே டிக்கையும்
வந்திருக் கும்புது மாப்பிள்ளையும் —
உளக்
கண்ணுக் கொளிதந்து காத்தோனைப்
போற்றவே
கைதட்டிப் பாடுங்காள் பிள்ளைகளே

4. தீப வடிவான தேவன்நம் முன்வந்து
தெள்ளொளியாய் நின்ற பண்டிகையாம்
— அவன்
கோபம்ம றந்தேநம் குழந்தையா னென்று
கூடியே பாடுங்காள் பிள்ளைகளே

5. ஒளிப்பிழம் பாகிநம் உள்ளத்தை
ஆட்கொண்டான்
உறவினன் ஆகிடும் பண்டிகையாம் —
மறைத்
தெளிவுமே தந்துளான் தேடியே
பின்செல்வோம்
தெம்புடன் பாடுங்காள் பிள்ளைகளே.

6. படுக்கை மறந்து பல்விளக்கேற்றிநாம்
பரனைக் கும்பிடும் பண்டிகையாம்
கொடும்ப வம்தனைக் கொன்றநாள் ஈதென்று
குதித்துப் பாடுங்காள் பிள்ளைகளே.

ஒளி வடிவானவன் பவ இருள் அரக்கனை இன்று கொன்றொழித்தான் என்றே நம் கொண்டாட்டம்.





Imprimatur

+ P. JUSTIN DIRAVIAM Archbishop of Madurai

விளக்கம் வேண்டுவோர்
விண்ணப்பிக்கவும் !



ஒளியைத் தேடவும்
உய்வை அடையவும்

வழியில் உதவும் உம் அடியார்எம் முகவரி

---


**நற்செய்தியாளர்**

இராமநகர் தேவகோட்டை வி. அஞ்சல்

இராமநாதபுரம் மாவட்டம்